இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

| | | |
|---|---|---|
| ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I<br>இஸ்லாமிய நாகரிகம் I<br>Islamic Civilization I | 47 T I | පැය දෙකයි<br>இரண்டு மணித்தியாலம்<br>*Two hours* |

அறிவுறுத்தல்கள் :

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.

※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** நபி முஹம்மத் (ஸல்) ஆரம்பித்து வைத்த இஸ்லாமிய சாம்ராஜ்யம் பல்வேறு கோத்திரக் குழுக்களால் ஆட்சி செய்யப்பட்டது. இதன்போது இடைக்கிடையே சிற்றரசுகளும் தோற்றம் பெற்றன. செல்ஜுக், புவைஹி எனும் சிற்றரசுகள் எந்த ஆட்சிக்காலத்தில் தோற்றம் பெற்றன ?
(1) கிலாபதுர் ராஷிதா
(2) அப்பாஸிய கிலாபத்
(3) உமையா கிலாபத்
(4) மொகலாயப் பேரரசு
(5) உஸ்மானிய கிலாபத்

**2.** இலங்கை தொடர்பான தகவல்களை உள்ளடக்கிய 'அஜாஇபுல் ஹிந்த்' என்ற நூலின் ஆசிரியர்
(1) இப்னு ஸஅத்
(2) மஸ்ஊதி
(3) அல்-இத்ரீஸி
(4) இப்னு ஸஹ்ரயார்
(5) சுலைமான் தாஜிர்

**3.** பின்வருவனவற்றுள் நான்கு கூற்றுகள் ஹதீஸ் தொடர்பான இஸ்லாத்தின் நிலைப்பாட்டைத் தெளிவுபடுத்துகின்றன. ஒன்று மட்டும் **முரண்படுகிறது**. அக்கூற்று யாது ?
(1) நபிகளார் காலத்தில் ஹதீஸ்கள், மனனம், எழுத்து, செய்கை என்பவற்றின் மூலம் பாதுகாக்கப்பட்டுள்ளன.
(2) 'மௌழுஆத்' வகை ஹதீஸ்களை ஏற்று, நடைமுறைப்படுத்துவது தவறாக மாட்டாது.
(3) நபிகளாரின் சொல், செயல், அங்கீகாரம் ஆகிய அனைத்தும் ஹதீஸ் என அழைக்கப்படுகின்றன.
(4) ஹதீஸ்களில் உயர் தராதரத்தை உடையதாக 'முதவாதிர்' வகை ஹதீஸ்கள் கருதப்படுகின்றன.
(5) நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் மறைவுடன் ஹதீஸ்கள் முற்றுப்பெற்றன.

**4.** கலீபா ம.்.மூனின் ஆட்சியின்போது, அவரது வாரிசாக நியமிக்கப்பட்டு, ம.்.மூனுக்கு முன்னதாகவே மரணமடைந்த, அலி (ரலி) குடும்பத்தைச் சேர்ந்த இமாம்
(1) இமாம் ஜ.்.பர் அஸ் ஸாதிக்
(2) இமாம் அலி அர் ரிழா
(3) இமாம் ஸைனுல் ஆபிதீன்
(4) இமாம் முஹம்மத் அல் பாகிர்
(5) இமாம் அலி அல் ஹாதி

**5.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) கூபி வகை அறபு எழுத்துக்கள் நேர்கோடுகளைக் கொண்டவை. அவை புள்ளிகளையோ உயிர்க்குறிகளையோ கொண்டிருப்பதில்லை.
(2) ஜாமிஉல் அஸ்ஹர் பல்கலைக்கழகத்தை ஐயூபிய ஆட்சியாளர்கள் நிறுவினர்.
(3) இலங்கையின் முதலாவது அறபுக் கல்லூரி, முஸ்லிம்கள் செறிவாக வாழும் அம்பாறை மாவட்டத்திலேயே நிறுவப்பட்டுள்ளது.
(4) கலீபாக்களின் விருப்பு வெறுப்புக்கமைய ஷூரா உறுப்பினர்களின் பதவிக்காலம் நிர்ணயம் செய்யப்பட்டது.
(5) பத்ஹுத்தயான், அறிஞர் சித்திலெவ்வையின் நூல்களுள் ஒன்றாகும்.

[பக். 2 ஐப் பார்க்க

**6.** கீழே **X** நிரலின்கீழ் முஸ்லிம் மருத்துவ அறிஞர்கள் சிலரின் பெயர்களும் **Y** நிரலின்கீழ் அவர்களால் எழுதப்பட்ட நூல்களின் பெயர்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (i) அஸ்ஸஹ்ராவி | A – கிதாப் அல்-அ.்.தியா |
| (ii) அலி பின் ஈஸா | B – தக்வீமுல் அப்தான் |
| (iii) இப்னு ஸுஹ்ர் | C – அத்தஸ்ரீப் |
| (iv) இப்னு ஜஸ்லா | D – கிதாபுல் குல்லியயாத் பித்திப்பி |
| (v) இப்னு ருஸ்து | E – தஸ்கிரதுல் கஹ்லைன் |

இங்கு **X** இலுள்ள அறிஞர்களின் பெயருக்கேற்ப **Y** இலுள்ள நூல்களை ஒழுங்குபடுத்தினால் வரும் விடை எது ?
(1) A B C D E (2) A C D B E (3) B A E D C (4) C D B A E (5) C E A B D

**7.** துருக்கியின் உஸ்மானிய சாம்ராஜ்யம் வீழ்ச்சியுறவும் அங்கு தனது அதிகாரத்தைப் பலப்படுத்துவதற்காக இஸ்லாமிய சிந்தனைக்கு மாறாகவும் செயற்பட்டவன்
(1) ஜமால் அப்துன் நாஸர் (2) முஸ்தபா கமால் (3) அலி அப்துல்லாஹ் ஸாலிஹ்
(4) அபூரகீபா (5) ஸைனுல் ஆபிதீன் பின் அலி

**8.** பின்வருவனவற்றுள் நான்கு சொற்கள் ஏதாவது ஒரு வகையில் இரண்டு மகுடங்களில் ஒன்றுபடுகின்றன. ஒன்று மட்டும் **பொருந்துவதில்லை.** அதனைத் தெரிவுசெய்க.
(1) பக்தாத் (2) கூபா (3) உமையாக்கள்
(4) டமஸ்கஸ் (5) அப்பாஸியர்

**9.** ஜம்உல் குர்ஆன் எனும் சொற்றொடர் சுட்டும் பொருள்
(1) அல்-குர்ஆன் தொகுப்பு
(2) அல்-குர்ஆன் வசனங்கள் அருளப்பட்ட ஒழுங்கு
(3) அல்-குர்ஆன் வசனங்கள் அருளப்பட்டமைக்கான காரணங்கள்
(4) அல்-குர்ஆனின் அற்புதம்
(5) அல்-குர்ஆனை திலாவத் செய்வதால் கிடைக்கப்பெறும் வெகுமதிகள்

**10.** இமாம் அபுல் ஹஸன் அலி அஷ்அரி (ரஹ்) அவர்களோடு கருத்து முரண்பட்ட அலி அல்ஜுபாஇ எந்த சிந்தனைப் பிரிவைப் பிரதிநிதித்துவப்படுத்தினார் ?
(1) அஷ்அரிய்யா (2) ஜபரிய்யா (3) அஷ்-ஷீஆ
(4) முர்ஜிஆ (5) மு.்.தஸிலா

**11.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) மஸ்ஜிதுல் அக்ஸா நபி முஹம்மத் (ஸல்) அவர்களால் கட்டப்பட்ட மஸ்ஜிதாகும்.
(2) இமாம் கஸ்ஸாலி (ரஹ்), முஸ்லிம் உலகு பெற்றெடுத்த பிரபல்யமான புவியியல் அறிஞர் ஒருவராவார்.
(3) காதியானிகள் என்போர், முஸைலமா என்பவனை நபியாக ஏற்றுக்கொண்ட குழுவினராவர்.
(4) 'ஜஸீரதுல் அரப்' என்ற பதம் அறபுத் தீபகற்பத்தைச் சுட்டுகிறது.
(5) 'ஜயாமுல் அரப்' என்பது க.்.பதுல்லாஹ்வில் கொண்டாடப்பட்ட இலக்கிய விழாவைக் குறிக்கின்றது.

**12.** கலீபா அலி (ரழி) காலத்தில் இடம்பெற்ற இரு யுத்தங்கள்
(1) தபூக் - கைபர் (2) ஜமல் - ஸிப்பீன் (3) யர்மூக் - காதிஸிய்யா
(4) கர்பலா - ஹர்ராப் (5) நிஹாவன்த் - நஹ்ர்வான்

**13.** இலங்கை முஸ்லிம்களின் ஆரம்பக் குடியேற்றங்கள் துறைமுக நகர்களில் அமைந்திருந்தன. அங்கு முஸ்லிம்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இந்த வகையில் பேருவலைத் துறைமுகத்தைத் தனது செல்வாக்கின்கீழ் வைத்திருந்த முஸ்லிம் நபர்
(1) கோயாஜான் (2) ஜலஸ்தி (3) வஸ்துஹிமி
(4) ஹஜ்ஜி முஹம்மத் (5) நாகூதா இபுறாஹீம்

**14.** உலகின் பழைமை வாய்ந்த பல்கலைக்கழகங்கள் முஸ்லிம் நாடுகளிலேயே அமைந்துள்ளன. இந்த வகையில் பக்தாதில் உள்ள 'மதரஸா நிழாமிய்யா' பல்கலைக்கழகத்தை நிறுவிய ஆட்சியாளர்கள்
(1) ஐயூபி (2) பாதிமி (3) புவைஹி
(4) மம்லூகி (5) செல்ஜுகி

**15.** 'தாதுன்னிதாகைன்' என்ற சிறப்புப் பெயருக்குரிய பெண்மணி
(1) கதீஜா பின்த் குவைலித் (ரழி) (2) பாதிமா பின்த் முஹம்மத் (ரழி)
(3) அஸ்மா பின்த் அபூபக்ர் (ரழி) (4) ஹப்ஸா பின்த் உமர் (ரழி)
(5) உம்மு குல்ஸூம் பின்த் அகபா (ரழி)

[பக். 3 ஐப் பார்க்க

- பின்வருவன முஸ்லிம்கள் மத்தியில் கையாளப்படுகின்ற பிரபல்யமான சொற்கள் சிலவாகும். அதனை அடிப்படையாகக் கொண்டு **16 – 20** வரையான வினாக்களுக்கு விடை தருக.

| | |
|---|---|
| A – தக்லீத் | G – மக்பூல் |
| B – அஸ்ல் | H – முஹாஸபா |
| C – முராகபா | I – ஸஹீஹ் |
| D – மதன் | J – ஹுக்ம் |
| E – முஹ்கம்-முதஷாபிஹ் | K – முஜ்தஹித் |
| F – முரீத் | L – ஸபபுன் நுஸூல் |

**16.** பிக்ஹுக் கலையுடன் தொடர்பானவை
(1) A, C (2) A, K (3) C, I (4) D, H (5) K, L

**17.** ஹதீஸ் கலையுடன் தொடர்பானவை
(1) A, J (2) B, I (3) C, D (4) D, G (5) D, L

**18.** தஸவ்வுப் கலையுடன் தொடர்பானவை
(1) B, G (2) C, D (3) C, E (4) C, F (5) E, F

**19.** கியாஸ் சட்டமூலாதாரத்தின் அடிப்படைகள் (அர்கானுல் கியாஸ்) இரண்டைக் கொண்ட சொற்சோடி
(1) A, C (2) B, D (3) B, J (4) D, G (5) J, K

**20.** குர்ஆனியக் கலையோடு தொடர்பானவை
(1) A, I (2) D, H (3) E, K (4) E, L (5) E, H

**21.** நபி முஹம்மத் (ஸல்) தனது முதல் வஹியை ஹிராக் குகையில் வைத்து பெற்றுக்கொண்டார்கள். அதன்போது ஒரு ஸூராவின் முதல் ஐந்து வசனங்கள் வஹியாக அருளப்பட்டன. அந்த வசனங்களை உள்ளடக்கியுள்ள ஸூரா
(1) அல்-பலக் (2) அல்-அலக் (3) அல்-முல்க்
(4) அல்-கஹ்ப் (5) அல்-பலத்

**22.** காழி நீதிபதிகளை நியமனம் செய்யும் அதிகாரம் வழங்கப்பட்டுள்ள நிறுவனம்
(1) சமய, கலாசார அமைச்சு
(2) முஸ்லிம், சமய, கலாசார அலுவல்கள் திணைக்களம்
(3) ஜம்இய்யதுல் உலமா மத்திய செயற்குழு
(4) நீதிச் சேவைகள் ஆணைக்குழு
(5) உயர் நீதிமன்றம்

**23.** ஹுதைபியா உடன்படிக்கையின் சில நியதிகள் முஸ்லிம்களை சஞ்சலப்படுத்தியபோதிலும் நபியவர்கள் அமைதியைப் பேணிவந்தார்கள். உம்ராவுக்கான குர்பானியைக் கொடுப்பதில் ஸஹாபாக்கள் பின்வாங்கினர். இவ்வேளை நபியவர்களுக்கு ஆலோசனை வழங்கி சுமுக நிலையை ஏற்படுத்தியவர்
(1) உம்மு ஸல்மா (ரழி) (2) ஹப்ஷா (ரழி) (3) ஆயிஷா (ரழி)
(4) மைமூனா (ரழி) (5) ஸவ்தா (ரழி)

**24.** ஸ்பெயின், சிந்து ஆகிய பிரதேசங்களை வெற்றிகொண்ட தளபதிகள்
(1) மூஸா பின் நுஸைர், மஸ்லமா
(2) தாரிக் பின் ஸியாத், முஹம்மத் பின் காஸிம்
(3) ஹஜ்ஜாஜ் பின் யூஸுப், குதைபா பின் முஸ்லிம்
(4) குதைபா பின் முஸ்லிம், மஸ்லமா
(5) முஹம்மத் பின் காஸிம், ஹஜ்ஜாஜ் பின் யூஸுப்

**25.** பின்வரும் வரலாற்று நிகழ்வுகளில் தூமதுல்ஜன்தல் என்ற இடம் தொடர்புபடும் நிகழ்வு யாது ?
(1) தாத்தாரியருக்கும் முஸ்லிம்களுக்குமிடையிலான போராட்டத்தில் தாத்தாரியர் தோல்வியடைந்தமை
(2) சிப்பீன் யுத்தத்தின் பின் கலீபா அலி (ரழி), முஆவியா (ரழி) ஆகிய இருவரதும் பிரதிநிதிகள் சமாதானப் பேச்சுவார்த்தை நடத்தியமை
(3) உஹத் யுத்தத்தில் இரண்டாம் கட்டப் போராட்டத்தில் முஸ்லிம்கள் திடீரெனத் தாக்கப்பட்டமை
(4) நபியவர்களும் ஸஹாபாக்களும் 'உயிருள்ளவரை போராடுவோம்' என்று மரம் ஒன்றின் கீழ் சத்தியப் பிரமாணம் செய்து கொண்டமை
(5) ஹிஜ்ரத்தின்போது நபிகளாரைத் துரத்தி வந்து அன்னாரைக் கைப்பற்ற முயற்சித்த சுறாகா பின் மாலிக் பாலைவன மண்ணில் புதைந்தமை

[பக். 4 ஐப் பார்க்க

4815

26. கூபாவை பிறப்பிடமாகக் கொண்ட இஸ்லாமிய சட்டத்துறை அறிஞர்
(1) இமாம் அபூ ஹனீபா (ரஹ்) (2) இமாம் ஷாபிஈ (ரஹ்)
(3) இமாம் அஹமத் பின் ஹன்பல் (ரஹ்) (4) இமாம் மாலிக் (ரஹ்)
(5) இமாம் இபுனு தைமியா (ரஹ்)

27. 'முஸ்லிம் உம்மத்தினர் ஹதீஸைப் பின்பற்ற வேண்டும்' என்பதற்கான அடிப்படைக் காரணம்
(1) அல்-குர்ஆனைப் போலவே ஹதீஸும் அறபு மொழியில் அமைந்திருப்பது
(2) அல்-குர்ஆனைப் போலவே ஹதீஸையும் பின்பற்ற வேண்டுமென அல்லாஹ் கட்டளையிட்டிருப்பது
(3) அல்-குர்ஆனும் ஹதீஸும் நபியவர்களின் காலத்தில் ஸஹாபாக்களால் மனனமிடப்பட்டிருப்பது
(4) அஸ்மாஉர் ரிஜால், அல்ஜரஹு வத்தஅதீல் போன்ற கலைகள் தோற்றுவிக்கப்பட்டு தூய்மையான ஹதீஸ்கள் இனங்காணப்பட்டு, பாதுகாக்கப்பட்டிருப்பது
(5) ஹதீஸ்கள் மூலமாக முஸ்லிம்களின் கலாசார ஒருமைப்பாடு பேணப்பட்டிருப்பது

28. இலங்கை ஜமாஅதே இஸ்லாமி, கடந்த நான்கு தசாப்தங்களாக இஸ்லாமிய சஞ்சிகையொன்றை வெளியிட்டு இலங்கை முஸ்லிம்களின் சமய கலாசார மேம்பாட்டில் பங்களிப்புச் செய்து வருகிறது. அந்த சஞ்சிகை
(1) அல்-ஹஸனாத் (2) இஸ்லாமிய சிந்தனை (3) உண்மை உதயம்
(4) வைகறை (5) அல்-இன்ஷிராஹ்

29. ஐரோப்பியரிடையே Albumasar, Rhazez எனும் பெயர்களால் பிரபல்யமடைந்துள்ள இரண்டு முஸ்லிம் அறிஞர்கள்
(1) அபுல் வபா, இத்ரீஸி (2) அபூஸைத் பல்கி, இப்னுல் ஹைதம்
(3) அபூ மஷ்ஹர், ஸகரிய்யா அர்ராஸி (4) அல்-குவாரிஸ்மி, அஹமத் தபரீ
(5) அபுல் காஸின் - இபுனு ஜஸ்லா

30. மு.'.தஸிலாக்களின் பிரதான ஐந்து கோட்பாடுகளுள் **அடங்காதது**
(1) அல்-அத்ல் (2) அத்தௌஹீது
(3) அல்-இஸ்மத் (4) அல்-வ.'.து வல் வஈத்
(5) அல் மன்ஸிலது பைனல் மன்ஸிலதைன்

● **31** தொடக்கம் **35** வரையான ஒவ்வொரு வினாவிலும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. அக்கூற்றுகள் பற்றிய மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையினைப் பின்வரும் அட்டவணையிலுள்ள இலக்கம் (1), (2), (3), (4), (5) என்பவற்றிலிருந்து தெரிவுசெய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | சரியானது | பிழையானது |
| (3) | பிழையானது | பிழையானது |
| (4) | பிழையானது | சரியானது |
| (5) | சரியானது | முதலாம் கூற்றைத் தெளிவாக விளக்குகிறது |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 31. | பிரபல்யமான நான்கு மஸ்ஹப்களின் இமாம்களும் முஜ்தஹித் முத்லக் ஆவர். | இஸ்லாத்தில் சேர்ந்துள்ள இஸ்லாமல்லாதவற்றை நீக்கி, இஸ்லாத்தை அதன் உண்மை நிலைக்குக் கொண்டுவருவதை 'தஜ்தீத்' என்பர். |
| 32. | முதவாதிர் தரத்திலான அனைத்து ஹதீஸ்களும் மக்பூல் அந்தஸ்தைப் பெற்றுள்ளன. | 'தஸ்கியா' என்ற சொல் 'தஸ்கியதுன்னப்ஸ்' என்பதன் சுருக்கமாகும். உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவதே இதன் கருத்தாகும். |
| 33. | தாத்தாரியர் படையெடுப்பால் 1258 இல் ஈராக் வீழ்ச்சியடைந்தவாறு சிலுவை வீரர்களின் படையெடுப்பால் 1924 இல் துருக்கி வீழ்ச்சியடைந்தது. | சுதந்திரத்துக்குப் பிற்பட்ட இலங்கைப் பாராளுமன்றத்தில் 2014 ஆம் ஆண்டு வரை இரண்டு முஸ்லிம்கள் சபாநாயகர்களாகப் பணியாற்றியுள்ளனர். |
| 34. | 'தப்ஸீருல் குர்ஆனில் அழீம்' என்ற அல்-குர்ஆன் விளக்கவுரை, இமாம் தபரீ அவர்களால் எழுதப்பட்டது. | இஸ்லாமிய ஆண்டு நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் பிறப்பை அடிப்படையாகக் கொண்டு கணிப்பீடு செய்யப்படுகிறது. |
| 35. | டமஸ்கஸைச் சேர்ந்த காலித் பின் பகாயா என்பவரின் பெயரினாலான நினைவுக்கல் இலங்கையில் கண்டெடுக்கப்பட்டுள்ளது. | இமாம் அபுல் ஹஸன் அஷ்ஷாதுலி (ரஹ்) அவர்களின் அஷ்அரிய்யாக் கோட்பாட்டை இமாம் மாதுருதி (ரஹ்) அவர்கள் ஆதரித்துள்ளார்கள். |

[பக். 5 ஐப் பார்க்க

**36.** சுமார் ஐந்து நூற்றாண்டுகள் இஸ்லாமிய சாம்ராஜ்யத்தை அப்பாஸிய கலீபாக்கள் ஆட்சி செய்தனர். பின்வருவோருள் அப்பாஸிய கலீபா **அல்லாதவர்** யார் ?

(1) ஹாறூன் அர்ரஷீத்
(2) மர்வான் பின் ஹகம்
(3) அபூஜ.'.பர் அல்-மன்ஸூர்
(4) அபுல் அப்பாஸ் அஸ்ஸப்பாஹ்
(5) அல்-முதவக்கில்

**37.** மிகப் பிரபல்யமான இஸ்லாமிய த.'.வா அமைப்புகளின் ஸ்தாபகர்கள்

(1) மௌலானா இல்யாஸ், இமாம் முஹம்மத் அப்துஹு ஆவர்.
(2) ஷஹீத் ஸெய்யத் குத்ப், இமாம் ஹஸன் அல்-பன்னா ஆவர்.
(3) மௌலானா மௌதூதி, மௌலானா அபுல் ஹஸன் அலி நத்வி ஆவர்.
(4) மௌலானா இல்யாஸ், இமாம் ஹஸனுல் பன்னா ஆவர்.
(5) இமாம் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப், மௌலானா ஸகரிய்யா ஸாஹிப் ஆவர்.

**38.** கி. பி. 8ஆம் நூற்றாண்டு முதல் இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சி ஆரம்பமாகியுள்ளது. அதில் மொகலாயர் ஆட்சி பலம் மிக்கதாக இருந்தது. அவ்வாட்சியைத் தோற்றுவித்தவர்

(1) மன்னர் அக்பர்
(2) மன்னர் ஸஹீருதீன் பாபர்
(3) மன்னர் ஹுமாயூன்
(4) மன்னர் ஔரங்கஸீப்
(5) மன்னர் ஷாஹ்ஜஹான்

**39.** நபியவர்களின் மதீனா ஹிஜ்ரத்தின்போது பலர் முக்கியமான பணிகளைப் பொறுப்பேற்றிருந்தனர். அக்குழுவில் **அடங்காதவர்**

(1) அபூபக்ர் (ரழி)
(2) அப்துல்லாஹ் பின் உரைகத்
(3) அஸ்மா பின்த் அபீபக்ர் (ரழி)
(4) உஸாமா பின் ஸைத் (ரழி)
(5) ஆமிர் பின் புஹைரா (ரழி)

**40.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.

(1) கிதாபுஸ்ஸிபா, ஸூரதுல் அர்ழ் ஆகியன குவாரிஸ்மியினால் எழுதப்பட்ட நூல்களாகும்.
(2) இலங்கையின் சுதந்திரத்துக்காக இலங்கை முஸ்லிம்கள் யாதொரு பங்களிப்பையும் நல்கவில்லை.
(3) ஸைத் பின் ஸாபித் (ரழி) அவர்கள் அல்-குர்ஆன் தொகுப்பில் முதல் மூன்று காலகட்டங்களிலும் பங்கெடுத்தவராவார்.
(4) பாதிமீக்கள், ஐயூபியர் ஆகிய இருசாராரும் எகிப்தை ஆட்சிசெய்த ஷீஆப் பிரிவினராவர்.
(5) இலங்கையின் முதலாவது அறபுக் கல்லூரி கிழக்கு மாகாணத்திலே நிறுவப்பட்டது.

**41.** இலங்கை முஸ்லிம்களின் ஆரம்பக் குடியேற்றங்கள் அமைந்திருந்த ஐந்து துறைமுக நகரங்களாவன

(1) புத்தளம், கொழும்பு, மன்னார், சிலாபம், கற்பிட்டி
(2) கொழும்பு, திருகோணமலை, புத்தளம், வெலிகம, பொத்துவில்
(3) மன்னார், பேருவலை, கொழும்பு, புத்தளம், திருகோணமலை
(4) யாழ்ப்பாணம், திருகோணமலை, மட்டக்களப்பு, மன்னார், கற்பிட்டி
(5) திருகோணமலை, அம்பாந்தோட்டை, கொழும்பு, புத்தளம், வெலிகம

**42.** கி.பி. 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் முஸ்லிம் நேசன், ஸவாப் முதலான பத்திரிகைகள் வெளியாகின. அவற்றுள் ஸவாப் பத்திரிகையை ஆரம்பித்தவர்

(1) அருள்வாகி அப்துல் காதர்
(2) மாப்பிள்ளை லெவ்வை ஆலிம்
(3) எம்.ஸீ. அப்துர் ரஹ்மான்
(4) ஐ. எல். எம். ஏ. அஸீஸ்
(5) மாகான் மாகார்

● பின்வரும் முஸ்லிம் நாடுகள், நகரங்களின் பெயர்களை அடிப்படையாகக் கொண்டு **43** தொடக்கம் **45** வரையான வினாக்களுக்கு விடை எழுதுக.

A – மக்கா
B – மதீனா
C – டமஸ்கஸ்
D – இந்தியா
E – ஆப்கானிஸ்தான்
F – ஸ்பெயின்
G – ஆஸர்பைஜான்
H – கூபா
I – ஈராக்
J – பலஸ்தீன்
K – கெய்ரோ
L – சிரியா

[பக். 6 ஐப் பார்க்க

**43.** 'மதாஇன்', 'சுர்ர மன் ரஆ' ஆகிய நகரங்கள் அமைந்திருந்த நாடு
(1) D (2) F (3) G (4) I (5) L

**44.** 'ஜாமிஉ அம்ரிப்னுல் ஆஸ்' அமைந்திருந்த நகரம்
(1) A (2) C (3) E (4) H (5) K

**45.** 'அந் நஸ்ர்' என்ற சிற்றரசு காணப்பட்ட நாடு
(1) E (2) F (3) G (4) I (5) J

**46.** கலீபா உஸ்மான் (ரழி) காலத்தில் முஸ்லிம்களிடையே பிளவை ஏற்படுத்தி, அலி (ரழி) அவர்களுக்கே ஆட்சி உரியது எனப் பிரசாரம் செய்து அலி (ரழி) ஆதரவாளர் குழு ஒன்று உருவாகக் காரணமாக அமைந்தவன்
(1) ஸுஹைல் பின் அம்ர் (2) அப்துல்லாஹ் பின் ஸபா (3) உத்பா பின் ரபீஆ
(4) உபை பின் ஸலூல் (5) வலீத் பின் முகீரா

**47.** பின்வருவனவற்றுள் **பிழையான** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) ஹுனைன் யுத்தத்தில் ஸப்வான் பின் உமையா என்பவர் இஸ்லாத்தை ஏற்றிராத நிலையில் நபிகளாருக்கு ஒத்துழைப்பு வழங்கியுள்ளார்கள்.
(2) கொன்ஸ்தாந்திநோபிள் கி.பி. 1453 இல் முஸ்லிம்களால் வெற்றி கொள்ளப்பட்டது. சுல்தான் முஹம்மத் அல்-பாதிஹ் இதற்குக் காரணமாக இருந்தார்.
(3) அல்-குர்ஆன் நபியவர்கள் காலத்திலேயே எழுத்து, மனனம் என்ற இருவகைப் பாதுகாப்பையும் பெற்றுக்கொண்டது.
(4) கலீபா மன்ஸூரின் காலத்தில் தோற்றம் பெற்ற மு.்.தஸிலா, கலீபா முதவக்கில் காலத்தில் மிகை வளர்ச்சி கண்டது.
(5) இம்ரஉல் கைஸ், ஜாஹிலிய்யாக் காலத்தில் காணப்பட்ட பிரபல கவிஞராவார்.

**48.** ஒரு பிரச்சினைக்கு குர்ஆனிலோ ஹதீஸிலோ தீர்வு காணப்படாதபோது தனது பகுத்தறிவைப் பயன்படுத்தி தீர்வு காண முயற்சிப்பேன் என ஸஹாபி ஒருவர் குறிப்பிட்டபோது, நபியவர்கள் அதனை ஏற்றுக்கொண்டார்கள். மேற்படி கூற்றை முன்வைத்த ஸஹாபி
(1) மஆத் பின் ஜபல் (ரழி) (2) அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரழி)
(3) முஸ்அப் பின் உமைர் (ரழி) (4) அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரழி)
(5) ஸைத் பின் ஸாபித் (ரழி)

**49.** நபி (ஸல்) அவர்கள் தனது 40 ஆவது வயதில் ஹனீப்களுள் ஒருவரான வரகா பின் நவ்பல் அவர்களைச் சந்தித்தார்கள். அதற்குப் பின்னணியாக அமைந்த மிகச் சரியான விடயம்
(1) குறைஷியர் நபியவர்களையும் அவர் தோழர்களையும் துன்புறுத்தியமை
(2) நபியவர்கள் நேரடியாகச் சென்று அவரை இஸ்லாத்தின்பால் அழைத்தமை
(3) கதீஜா (ரழி) யின் உறவினராதலால் சுகதுக்கம் விசாரிக்கச் சென்றமை
(4) நபியவர்கள் முதல் வஹியைப் பெற்று அதிர்ச்சிக்குட்பட்டிருந்ததால், அவர் பெற்ற வஹியின் உண்மைத் தன்மையை அறிந்து கொள்ள கதிஜா (ரழி) அழைத்துச் சென்றமை
(5) வரகா பின் நவ்பல் இஸ்லாத்தின் தௌஹீத் கோட்பாட்டுக்கு நெருக்கமான ஹனீப் ஒருவர் என்பதால் அவரைச் சந்தித்துப் பேச விரும்பியமை

**50.** இமாம் முஹம்மது அப்துஹு மற்றும் இமாம் ரஷீத் ரிழாவினால் எழுதப்பட்ட அல்-குர்ஆன் விளக்கவுரை
(1) தப்ஸீருல் குர்ஆனில் ஆழீம் (2) தப்ஸீருல் மனார் (3) தப்ஸீர் பீழிலாழில் குர்ஆன்
(4) தப்ஸீர தப்ஹீமுல் குர்ஆன் (5) தப்ஸீர ஜலாலைன்

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

| | | |
|---|---|---|
| ඉස්ලාම් ශිෂ්ටාචාරය II<br>இஸ்லாமிய நாகரிகம் II<br>Islamic Civilization II | 47 T II | පැය තුනයි<br>மூன்று மணித்தியாலம்<br>Three hours |

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** (i) அபூபக்ர் (ரலி) அவர்கள் குர்ஆனைத் தொகுப்பது சம்பந்தமாக மேற்கொண்ட நடவடிக்கைகளைக் குறிப்பிடுக.
(ii) சட்ட மூலாதாரம் என்றவகையில் ஸுன்னாவின் முக்கியத்துவம் பற்றி விளக்குக.
(iii) “இஜ்மா∴ ஒரு சட்ட மூலாதாரமாகும்” என்பதை குர்ஆன் ஹதீஸ் ஆதாரங்களுடன் நிறுவுக.
(iv) முஜ்தஹித்கள் கட்டாயம் பெற்றிருக்க வேண்டிய தகைமைகளைப் பரிசீலிக்குக.
(v) இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்களின் இஸ்லாமியச் சட்டத்துறைக்கான பங்களிப்பை மதிப்பிடுக.

**2.** (i) இஸ்லாமிய நாகரிகத்தின் சிறப்புப் பண்புகள் **நான்கினைக்** குறிப்பிடுக.
(ii) இஸ்லாமிய நாகரிகம் நலிவடைந்தமைக்கான **நான்கு** காரணிகளை எழுதுக.
(iii) மத்திய காலப் பகுதியில் இஸ்லாமிய நாடுகளும் ஐரோப்பிய நாடுகளும் அறிவியலை எவ்வாறு எதிர்கொண்டன என்பதை விளக்குக.
(iv) முஸ்லிம் அறிஞர்களின் வானியற்றுறைப் பங்களிப்பைச் சுருக்கமாக விளக்குக.
(v) ஸ்பெயினில் முஸ்லிம்களது ஆட்சி வீழ்ச்சியடைந்தமைக்கான காரணிகள் **நான்கினை** விமர்சன ரீதியாக ஆராய்க.

**3.** (i) கலீபா அப்துல் மலிக் பின் மர்வான், எதிர்கொண்ட பல்கோண சவால்களை வெற்றிகொண்ட விதத்தைச் சுருக்கமாக விளக்குக.
(ii) உமையா கிலாபத்தை நல்வழிப்படுத்த கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) மேற்கொண்ட சீர்திருத்த நடவடிக்கைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.
(iii) கிலாபதுர் ராஷிதாவுக்கும் உமையா கிலாபத்துக்குமிடையே காணப்பட்ட நிர்வாக ரீதியிலான வேறுபாடுகளை ஆராய்க.
(iv) அப்பாஸிய கிலாபத்தை ஸ்திரப்படுத்துவதில் கலீபா அபூஜ∴பர் அல்-மன்ஸுரின் பங்களிப்பைச் சுருக்கமாக விளக்குக.
(v) கலீபா ம∴மூன் ரஷீத் காலத்தில் ஏற்பட்ட அறிவியல் விருத்தி பற்றி ஆராய்க.

## பகுதி II

**4.** (i) இலங்கை முஸ்லிம்களின் தொன்மையான வரலாற்றைச் சான்றுகளுடன் நிறுவுக.
(ii) இலங்கையில் போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் ஆட்சிக் காலங்களில் முஸ்லிம்கள் எதிர்கொண்ட சவால்களை எடுத்துரைக்குக.

**5.** (i) ஷீஆக்களின் தோற்றப் பின்னணியையும் அவர்களின் **நான்கு** அடிப்படைக் கோட்பாடுகளையும் சுருக்கமாக விளக்குக.
(ii) ஷீஆக்களின் பிரதான உட்பிரிவுகளான ஸைதிய்யா, இமாமிய்யா ஆகியவற்றை அறிமுகப்படுத்துக.

**6.** (i) மதீனா சாசனமும் ஹுதைபிய்யா உடன்படிக்கையும் இஸ்லாத்தின் பரவலுக்குப் பங்களிப்புச்செய்த விதத்தை எடுத்துக்காட்டுக.
(ii) உரோம, பாரசீக எல்லைகளில் கிலாபதுர்ராஷிதா காலப்பகுதியில் முஸ்லிம்கள் பெற்ற வெற்றிகளைச் சுருக்கமாக விபரிக்குக.

**7.** (i) புவியற்றுறையில் முஸ்லிம்களை ஈடுபடத் தூண்டிய காரணிகளைக் குறிப்பிடுக.
(ii) புவியியல் அறிஞர் அல்-குவாரிஸ்மியின் புவியற்றுறைக்கான சேவைகளை விளக்குக.

**8.** (i) தப்ஸீரக் கலையின் தோற்றம், வளர்ச்சி பற்றி விபரிக்குக.
(ii) இமாம் புஹாரி (ரஹ்) அவர்களது ஹதீஸ் துறைப் பங்களிப்பை மதிப்பிடுக.

* * *